etc. He has since reported that there is nothing of interest to the Madras Police and that no case of kidnapping of any girl of Madras State has come to light during the course of their investigation.

(ஆ) Does not arise.

SRI P. G. MANICKAM: மேற்கண்ட போட்டோக்களிலும் கடிதங்களிலும் சென்னை ராஜ்யம் சம்பந்தப்பட்ட ஏதாவது விவரங்கள் இருந்தனவா? அப்படியானால் அந்த விவரங்கள் என்ன என்பதைத் தெரிவிக்க முடியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: நான் அளித்த முதல் விடையிலேயே சொல்லி யிருக்கிறேன். சென்னை சம்பந்தப்பட்ட விவரங்கள் அதில் ஒன்றுமில்லை.

* 184 *Q.*—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Home be pleased to state the reasons for the increase in the number of cases of abduction in recent years in the State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: No specific reasons can be attributed.

SRI A. A. RASHEED: May I know, Sir, the number of cases in which the abducted women have not yet been traced?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I have no such particulars with me.

*Begging in railway stations and bus-stops*

* 185 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ரயில்வேக்களிலும், பஸ் ஸ்டாண்டுகளிலும் பிச்சை எடுப்பவர்களைத் தடை செய்ய உத்தேசம் உண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The two enactments which deal with the beggar problem in this State are the Madras City Police Act, 1888 (Sections 71-A to 71-L) and the Madras Prevention of Begging Act, 1945. These Acts already provide for the prevention of begging in Railways and Bus-stops.

SRI P. G. MANICKAM: ஸார், இதைத் தடுக்க பல சட்டங்கள் இருந்த போதிலும், அதிகமாக இந்தச் சட்டங்கள் கையாளப்படுவதில்லை யென்று தெரிகிறது. எங்கு பார்த்தாலும் பஸ் ஸ்டாண்டுகளிலும் சரி, ரயில்வே ஸ்டேஷன்களிலும் சரி பிச்சைக்காரர்களுடைய தொல்லை அதிகமாகிக்கொண்டே வருகிறது. இவர்கள் பொது மக்களுக்கு இடைஞ்சலாக இருப்பது மட்டுமன்றி சில சமயங்களில் திருட்டுத் தொழிலிலும் ஈடுபடுவதாகத் தெரிகிறது. ஆகவே இவர்களை அடக்குவதற்கு அரசாங்கத்தால் ஏதாவது உடனடியாக நடவடிக்கை எடுக்கப்படுமா?